

**சிறுவர்களை இணைக்கும் செயற்றிட்டம்**

பிரிந்த சிறுவர்களை தொடர்பில் தகவல் பெறுவதற்கான தொலைபேசி சேவை

PAGE 3




**ஆழிப்பேரலை ஏற்படுத்திய ஆறா வடுக்கள்**

'சுனாமி' இலங்கையை தாக்கி 5 ஆண்டுகள் பூர்த்தி

PAGE 4



**மீள்குடியமர்த்தப்படும் மக்களின் அபிவிருத்தி**

உலக வங்கியின் கிராமிய அபிவிருத்தி நிபுணருடனான செவ்வி

PAGE 5


# மீண்டும் வாழ்வோம்

மீண்டும் வாழ்வோம் (Sinhala)

பக்கங்கள் Pages 8 | Vol 2 | No 45

இலவச பிரதி Free Copy

Lifeline ▌Humanitarian Information For IDPs — 27.12.2009

இடம்பெயர்ந்த மக்களுக்கான மனிதாபிமான தகவல் பரிமாற்றம்


# மக்கள் போக்குவரத்துக்காக ஏ9 வீதி திறப்பு

நாட்டில் நிலவிய பாதுகாப்பற்ற சூழ்நிலை காரணமாக மூடப்பட்டிருந்த ஏ9 வீதியை மக்கள் போக்குவரத்துக்காக முழுமையாக திறக்க அரசாங்கம் கடந்த வாரம் தீர்மானித்தது. இவ்வீதியினூடான பாதுகாப்பு உறுதிப்படுத்தப்பட்டதையடுத்து இந்த நடவடிக்கை எடுக்கப்பட்டதாக இராணுவ பேச்சாளர் பிரிகேடியர் உதய நாணயக்கார தெரிவித்தார்.

**இது தொடர்பில் அவர் மேலும் கூறுகையில்,**

யாழ்ப்பாணத்திற்கு செல்லும் பிரதான வீதியாக இருந்த ஏ9 வீதியை மக்கள் போக்குவரத்துக்காக திறந்துவிட கடந்த வாரம் தீர்மானிக்கப்பட்டது. இதனடிப்படையில் இவ்வீதியினூடாக அனைத்து வாகனங்களும் எவ்வித அனுமதிப் பத்திரமும் கோரப்படாமல் செல்வதற்கு அனுமதி வழங்கப்பட்டுள்ளது. யாழ்ப்பாணத்திலுள்ளவர்கள் வேறு மாவட்டங்களுக்கும் வேறு மாவட்டங்களிலுள்ளவர்கள் யாழ்ப்பாணத்திற்கும் தங்குதடையின்றி செல்வதற்கான வாய்ப்பு இதன் மூலம் ஏற்படுத்திக் கொடுக்கப்பட்டுள்ளது என அவர் கூறினார்.

**அனைத்து வாகனங்களும் எவ்வித அனுமதிப் பத்திரமும் கோரப்படாமல் செல்வதற்கு அனுமதி வழங்கப்பட்டுள்ளது**

இதேவேளை ஏ9 வீதியூடாக யாழ்ப்பாணத்திலிருந்து வெளியேறும் வாகனங்களுடன் பாதுகாப்புதரப்பினர் செல்கின்றனர் என எழுந்துள்ள பிரச்சினைக்கு பதிலளிக்கும் வகையில் கருத்து தெரிவித்த பிரிகேடியர் உதய நாணயக்கார கூறியதாவது:

ஏ9 வீதியூடாக பயணிக்கும் பொதுமக்களின் பாதுகாப்புக்காக சிலவேளைகளில் பாதுகாப்பு தரப்பினர் அவர்களுடன் செல்கின்றனர். இவ்வீதியில் சில இடங்களில் மக்கள் இல்லாததினாலேயே பாதுகாப்புத்தரப்பினர் அவர்களுடன் செல்ல வேண்டி ஏற்பட்டுள்ளது என அவர் கூறினார்.

இதேவேளை ஏ9 வீதி திறக்கப்பட்டபோதிலும் தனியார் பஸ்கள் போக்குவரத்தை மேற்கொள்ள இதுவரை அனுமதி வழங்கப்படவில்லை என தனியார் பஸ் உரிமையாளர்கள் சங்கத் தலைவர் கெமுனு விஜேரட்ண தெரிவித்தார்.

» 2ஆம் பக்கம்

**சுமைகளைத் தாண்டி மலரும் இளமுறுவல்**



வரவிருக்கும் 2010ஆண்டுக்கான புதிய நம்பிக்கைகளுடன்...

## தேர்தல் வாக்களிப்பு:

## இடம்பெயர்ந்த முஸ்லிம்கள் தொடர்பான நிலவரம்

இடம்பெயர்ந்து புத்தளத்தில் வாழ்ந்துவந்த முஸ்லிம் மக்கள் தேர்தல் திணைக்களத்திற்கு விண்ணப்பிப்பதன் மூலம் ஜனாதிபதி தேர்தலில் வாக்களிக்கலாம் எனவும் அவ்வாக்குகள் தங்களது சொந்த இடத்தை பிரதிநிதித்துவப்படுத்துபவையாக அமையும் எனவும் புத்தளம் மாவட்ட அரசாங்க அதிபர் கிங்ஸ்லி பெர்னாண்டோ தெரிவித்துள்ளார்.

தற்போது மன்னார், முஸலி, மாந்தை, மற்றும் யாழ்ப்பாணம் போன்ற இடங்களுக்கு குறிப்பிட்ட ஆளவு முஸ்லிம் மக்கள் மீள்குடியமர்த்தப்பட்டுள்ளனர்.இவ்வாறு மீள்குடியமர்த்தப்பட்ட போதும் ஒரே குடும்பத்தைச் சேர்ந்தவர்களில் சிலர் இன்னும் புத்தளத்திலேயே வசிக்கின்றனர். இவர்கள் வாக்களிப்பதில் சிக்கல்கள் இருப்பதாக

» 3 ஆம் பக்கம்

# ஜனாதிபதித் தேர்தலில் இடம்பெயர்ந்தோர் வாக்களிக்க ஏற்பாடு

## 'குறைந்தளவிலானோரே பதிவு செய்துள்ளனர்' – தேர்தல் கண்காணிப்புக் குழு

இடப்பெயர்வுக்குள்ளான மக்களில் ஏறத்தாழ 16, 000 வரையிலானவர்களே இதுவரையில் எதிர்வரும் ஜனாதிபதித் தேர்தலில் வாக்களிப்பதற்கு விண்ணப்பித்துள்ளதாக சுதந்திரமானதும் நீதியானத்திற்குமான தேர்தல் அமைப்பான கபே (CAFFE) கடந்த வியாழனன்று தெரிவித்தது.

இதில் அண்ணளவாக வன்னி மாவட்டத்தைச் சேர்ந்த 13, 000 பேரும் யாழ்ப்பாணத்தைச் சேர்ந்த 3, 000 பேரும் அடங்குவர் என்று கபேயின் ஊடக பேச்சாளர் கீர்த்தி தென்னக்கோன் குறிப்பிட்டார்.

எதிர்வரும் ஜனவரி 26 அன்று ஜனாதிபதித் தேர்தல் இடம்பெறவுள்ள நிலையில், தேர்தலில் வாக்களிக்கவுள்ள இடம்பெயர்ந்த மக்கள் டிசம்பர் 24ஆம் திகதிக்கிடையில் தம்மைப் பதிவு செய்துக்கொள்ள வேண்டும் என அறிவிக்கப்பட்டிருந்தது. எனினும் கொடுக்கப்பட்ட கால எல்லைக்குள் குறைந்தளவிலான மக்களே தங்களை பதிவு செய்துள்ளனர் எனவும் அவர் கூறினார்.

**தேசிய அடையாள அட்டை அல்லது வேறு ஆவணங்கள் இல்லாதவர்களுக்கு தற்காலிக அடையாள அட்டை வழங்குவதற்கு நடவடிக்கை**

இதுபற்றி அவர் மேலும் கூறுகையில் ''வடக்கில் இடம்பெயர்ந்த மக்களின் வாக்களிப்பு பற்றி முறையான திட்டம் கையாளப்படாமையினால், அம்மக்கள் வாக்களிப்பது தொடர்பில் பல பிரச்சினைகள் எழுந்துள்ளன. இடம்பெயர்ந்த மக்கள் வாக்களிப்பு தொடர்பில் மேலும் கவனம் செலுத்தப்பட வேண்டிய கட்டாயம் இருக்கிறது''

இதேவேளை இடம்பெயர்ந்த மக்கள் வாக்களிப்பதற்கான அனைத்து ஏற்பாடுகளும் செய்யப்பட்டுள்ளதாக வடக்கு மாவட்ட உதவித் தேர்தல் ஆணையாளர் ஏ.எஸ்.கருணாநிதி தெரிவித்தார். இதுபற்றி அவர் மேலும் கூறுகையில

» 3ஆம் பக்கம்

# வாழ்வாதாரத் தகவல்கள்

## மீன்பிடிச்சட்டம் - 1996

மீன்பிடிக்கலங்கள் உற்பத்தி செய்யப்படும் போது, 1996ஆம் வருட திணைக்களச் சுற்று நிருபம் இல. 01 இல் குறிக்கப்பட்ட மீன்பிடி மற்றும் நீரியல் வளங்கள் சட்டம் இல. 02 இன் பிரகாரம் பிரமாணங்கள் கடைப்பிடிக்கப்பட வேண்டும்.

- மீன்பிடிக் கலங்கள் உற்பத்தி செய்யப்படும் வள்ளம் கட்டுமிடங்கள், மீன் பிடி மற்றும் நீரியல் திணைக்களத்தில் (FARD) பதிவு செய்யப்படவேண்டும்
- மீன்பிடிக்கலங்களை உற்பத்தி செய்வதற்கு முன்பதாக வள்ளங்களின் வடிவமைப்பிற்கான அனுமதியை FARD அத்தியட்சகரிடம் பெற்றுக்கொள்ள வேண்டும்
- 1980இல் மீன்பிடி வள்ளப்பதிவுச் சட்டப் பிரமாணங்களுக்கு அமைய இந்த வள்ளங்கள் FARD இல் பதிவு செய்யப்பட வேண்டும்.
- விண்ணப்பம் அனுப்பப்படும்போது, மாவட்ட காரியாலய மீன்பிடி உதவி அத்தியட்சகரினால் குறிக்கப்பட்ட அந்த வள்ளத்திற்கான ஒரு பதிவிலக்கம் ஒதுக்கப்படும். அந்த பதிவு இலக்கம் “Fisheries 49 (Amendment)” பத்திரத்தில் பதிவு செய்யப்பட வேண்டும்.
- ஒதுக்கப்பட்ட பதிவு இலக்கத்தையும் மாவட்டத்தின் குறியீட்டு எழுத்துகளையும் அந்த வள்ளத்தில் FARDஇறக்கமைய பொறிக்கப்பட வேண்டும்.
- அத்துடன் வள்ளம் கட்டுமிடத்தின் இலக்கமும் வள்ளத்தில் எழுதப்பட வேண்டும்
- ஒவ்வொரு வள்ளத்திற்கான கடலில் ஓட்டத்தகுந்த சான்றிதழினை FARD அத்தியட்சகரிடமிருந்தோ அல்லது அவரால் சிபாரிசு செய்யப்பட்ட உத்தியோகத்தரிடமிருந்தோ பெறப்படவேண்டும்.
- 1996இன் மீன்பிடி மற்றும் நீரியல் வளங்கள் சட்டம் இல: 02 இன் தொகுதி 6இல் உள்ள பிரமாணங்களுக்கேற்ப மீன்பிடித்தொழில் அனுமதிப்பத்திரம் FARD அத்தியட்சகரினால் சிபாரிசு செய்யப்பட்ட உத்தியோகத்தரிடமிருந்து பெற்றுக் கொள்ளவேண்டும்.



பிடித்த மீன்களை கரைக்கு கொண்டு வந்து பிரித்தெடுக்கும் மீனவரொருவர்

## மக்கள்...

(1ஆம் பக்கத் தொடர்ச்சி)

**இதுபற்றி அவர் மேலும் கூறுகையில்,**

ஏ9 வீதியூடான போக்குவரத்துக்கள் ஆரம்பிக்கப்பட்டுள்ளபோதிலும் தனியார் பஸ்கள் சேவையை ஆரம்பிக்க இன்னமும் அனுமதி வழங்கப்படவில்லை. ஆனாலும் யாழ்ப்பாணத்திலிருந்து வவுனியாவுக்கும், வவுனியாவிலிருந்து யாழ்ப்பாணத்திற்கும் சேவைகளை முன்னெடுக்க எமக்கு அனுமதி வழங்கப்பட்டுள்ளது. வடக்கு மக்களின் நலனை கருத்திற்கொண்டு யாழ்ப்பாணத்திலிருந்து கொழும்புக்கும் வேறு மாவட்டங்களுக்கும் போக்குவரத்தை மேற்கொள்ள நாம் எதிர்பார்க்கிறோம். இது தொடர்பில் இவ்வாரம் யாழ்ப்பாணத்திலுள்ள எமது தனியார் பஸ் உரிமையாளர் சங்கத்துடன் பேச்சுவார்த்தை நடத்தவுள்ளோம். இப்பேச்சுவார்த்தையையடுத்து ஏ9 வீதியூடாக தனியார் பஸ் போக்குவரத்து மேற்கொள்வது பற்றி தீர்மானிக்கப்படும் என்றார்.

அத்தோடு ஏ9 வீதியூடான போக்குவரத்துக்காக பாதை முழுமையாக திறக்கப்பட்டுள்ளமை தமக்கு பெரும் மகிழ்ச்சியை ஏற்படுத்தியுள்ளதாகக் கூறிய யாழ்ப்பாணம் வாழ் நபரொருவர், அது முழுமையாக நடைமுறைப்படுத்தப்பட நடவடிக்கை எடுக்க வேண்டும் எனவும் வேண்டுகோள் விடுத்தார்.

# பூகோள அரங்கில் மனிதாபிமானப் பணிகள்

தொகுப்பு : நிரஞ்சனி ரோலண்ட்

**சூடான்** சூடானில் உள்நாட்டு போர் காரணமாக தமது இருப்பிடங்களை இழந்தவர்களுக்கு வீடுகளை கட்டிக் கொடுப்பதற்கான நடவடிக்கைகளை சர்வதேச கரித்தாஸ் அமைப்பு மேற்கொள்ளவுள்ளது. சுமார் 3 இலட்சத்து 50 ஆயிரம் மக்களுக்கு வீடுகளை கட்டிக்கொடுப்பதற்கான 12 மில்லியன் டொலர்களை கொடை வழங்குனர்களிடமிருந்து சர்வதேச கரித்தாஸ் அமைப்பு கோரியுள்ளது.

இதேவேளை இந்த அமைப்பானது பாதிக்கப்பட்ட மக்களுக்கு குடிநீர், சுகாதார பராமரிப்பு மற்றும் வாழ்வாதாரம் போன்ற மனிதாபிமானப் பணிகளை தொடர்ச்சியாக மேற்கொண்டு வருகின்றமை குறிப்பிடத்தக்கது.

**யேமன்** யேமனில் தஞ்சமடைந்துள்ள எதியோப்பியர்களை கைது செய்தல் மற்றும் பலாத்காரமாக எதியோப்பியாவுக்கு மீள அனுப்புதலை யேமன் அரசு உடனடியாக நிறுத்த வேண்டுமென மனித உரிமைகள் கண்காணிப்பகம் தெரிவித்துள்ளது. இது தொடர்பாக யேமன் அரசுக்கு அழுத்தங்களை பிரயோகிக்குமாறு ஐ.நா. அகதிகளுக்கான அமைப்புக்கு மனித உரிமை கண்காணிப்பகம் கோரிக்கை விடுத்துள்ளது. சட்டவிரோத குடிபெயர்வானது யேமன் அரசுக்கு பாரிய பிரச்சினையாக இருந்த போதிலும் அங்கு தஞ்சமடைந்தவர்களை பலாத்காரமாக வெளியேற்றுவது இதற்கு தீர்வாக அமையாதென மனித உரிமைகள் கண்காணிப்பகத்தின் ஆபிரிக்காவுக்கான பணிப்பாளர் ஜோஜட் கெக்னோன் தெரிவித்துள்ளார்.

**பிலிப்பைன்ஸ்** பிலிப்பைன்ஸிலுள்ள லாவா ஓசிங் மெயோன் எரிமலைக்கருகில் வசித்து வரும் மக்களை அப்பகுதிகளிலிருந்து அப்புறப்படுத்தும் நடவடிக்கைகளில் பிலிப்பைன்ஸ் அதிகாரிகளும் சேவ் த சில்ரன் அமைப்பும் ஈடுபட்டு வருகின்றன.

இந்த எரிமலையானது மிக விரைவில் குமுற ஆரம்பிக்கும் என்ற பீதியின் பேரில் இம்மக்கள் அப்பகுதிகளிலிருந்து அப்புறப்படுத்தப்படுவதாக தெரிவிக்கப்படுகின்றது

இப்பகுதிகளில் வாழும் ஆயிரக்கணக்கான சிறுவர்கள் சேவ் த சில்ரன் அமைப்பினால் வழங்கப்பட்ட அனர்த்த அபாய முன்ஆயத்த பயிற்சிநெறிகளில் பங்குபற்றியுள்ளனர். இதனால் அர்த்தங்களை தைரியமாக எதிர்கொள்வதற்கான மனநிலையில் இவர்கள் இருக்கின்றனர் என சேவ் த சில்ரன் அமைப்பின் அனர்த்த அபாய முன்ஆயத்த பயிற்சிநெறிக்கான பயிற்சியாளர் ஹைசன் அலேன் தெரிவித்துள்ளார்.

**நேபாளம்** நேபாள மக்களுக்கு உலக உணவுத் திட்டத்தால் வழங்கப்பட்ட உதவிகளை ஐ.நா. நிறுத்தியுள்ளது. நிதி நெருக்கடி காரணமாகவே இந்த மனிதாபிமானப் பணிகள் நிறுத்தப்பட்டுள்ளன. நேபாளத்திலுள்ள 6 இலட்சம் மக்களுக்கு இன்னும் மூன்று மாதங்களுக்கு உணவளிப்பதற்காக 20 மில்லியன் ரூபா தேவைப்படுவதாக ஐ.நா. தெரிவித்துள்ளது. வரட்சி, பொருட்களின் விலை அதிகரிப்பு, பாதுகாப்பற்ற சூழ்நிலை மற்றும் பொருளாதார நெருக்கடி காரணமாக பாதிக்கப்பட்ட நேபாளத்திலுள்ள மில்லியன் கணக்கான வறிய மக்கள் உலக உணவுத் திட்டத்தின் மூலம் பயனடைந்ததாக உலக உணவுத் திட்டத்தின் பிரதி வதிவிடப் பிரதிநிதி டொமினிக் ஹைட் தெரிவித்துள்ளார்.



ஐரோப்பா ஆசியா அவுஸ்திரேலியா
வட-அமெரிக்கா தென்-அமெரிக்கா ஆபிரிக்கா





மீண்டும் வாழ்வோம் (Lifeline) செயற்றிட்டமானது USAID இனால் நிதியளிக்கப்பட்டு Internews Network இனால் நடைமுறைப்படுத்தப்படுகின்றது.



# பாதிக்கப்பட்ட மாணவர்களின் கல்வி மேம்பாட்டுக்கு நடவடிக்கை

*எஸ். நிஸாம் எம். ஸுஹைல்*

கடந்த காலங்களில் ஏற்பட்டிருந்த அசாதாரன சூழ்நிலைகள் காரணமாக கல்வியை இழந்த 14 வயதிற்கு கீழ்பட்ட மாணவர்களுக்கு மீண்டும் கல்வியை தொடர நடவடிக்கை எடுக்கப்பட்டுள்ளதாகத் தெரிவிக்கப்படுகிறது.

**பாடசாலை செல்லாத மாணவர்களை இணைத்துக் கொள்ளும் பொருட்டு அதிபர், கிராம சேவகர்கள் கொண்ட ஒரு குழு அமைக்கப்பட்டுள்ளது**

திருகோணமலை மாவட்டத்தின் பதவிய ஸ்ரீபுர பகுதியில் இவ்வருடத்தில் மீண்டும் பாடசாலைகள் திறந்து வைத்தபோது 14 வயதிற்கு கீழ்ப்பட்ட பாடசாலை கல்வியை இழந்த பல மாணவர்கள் பாடசாலையில் மீண்டும் இணைந்துள்ளதாகவும், இவர்கள் பத்து வருடங்களுக்கு மேல் கல்வியை இழந்திருப்பதாகவும் கிழக்கு மாகாண சுகாதார அமைச்சர் எம். ஏல் ஏ. எம். ஹிஸ்புல்லாஹ் தெரிவித்தார்.

அது தொடர்பாக அவர் மேலும் தெரிவிக்கையில், கிழக்கு மாகாணத்திலே நிலவிய யுத்தசூழ்நிலை காரணமாக கடந்த 10 வருடத்திற்கும் மேல் பல பாடசாலைகள் மூடப்பட்டிருந்தது. இன்று ஜனாதிபதியின் தலைமைத்துவத்தின் கீழ் கிழக்கு மாகாணத்தில் உள்ள எல்லா பாடசாலைகளையும் திறப்பதற்கான நடவடிக்கை எடுத்துள்ளோம். தற்போது சுமார் 996 பாடசாலைகள் கிழக்கு மாகாணத்தில் இயங்கி வருகின்றன என்றார்.

திருகோணமலை கல்வி வலயத்திற்கு உட்பட்ட பாடசாலைகள் தொடர்ந்தும் இயங்கிக் கொண்டிருப்பதாகவும், கடந்த 20 வருடங்களுக்கு மேல் மூடப்பட்டிருந்த நான்கு பாடசாலைகள் அடுத்தவருடம் மீண்டும் ஆரம்பிக்க நடவடிக்கை எடுக்கப்பட்டுள்ளதாகவும் திருகோணமலை வலயக்கல்விப்பணிப்பாளர் அருளானந்தம் விஜயானந்தமூர்த்தி தெரிவித்தார்.

அவர் மேலும் கூறுகையில், தொடர்ந்தும் 5 தொடக்கம் 14 வயதிற்கு உட்பட்ட, கட்டாயக் கல்வியைப் பெற வேண்டிய மாணவர்களுக்கு கல்வி வாய்ப்பை ஏற்படுத்தவும், படிப்பை இழந்த அல்லது பாதியில் நிறுத்தி வேலையில் ஈடுபடும் மாணவர்களை மீண்டும் பாடசாலையில் இணைத்துக்கொள்ளவும் நடவடிக்கைகள் எடுக்கப்படுகின்றன. அவர்களின் வயதிற்கும், கல்வித் தேவைக்கும் ஏற்ற வகையில் விசேட வகுப்புக்களை ஒழுங்குபடுத்தவும் நடவடிக்கை எடுத்துள்ளோம்.

திருகோணமலை கல்வி வலயத்திற்கு உட்பட்ட பாடசாலை செல்லாத மாணவர்கள் இருப்பின் அவர்களை மீண்டும் பாடசாலைகளில் இணைத்துக் கொள்ளும்

**திருகோணமலை மாவட்டத்தில் கடந்த 20 வருடங்களுக்கு மேல் மூடப்பட்டிருந்த நான்கு பாடசாலைகளை மீண்டும் ஆரம்பிக்க நடவடிக்கை எடுக்கப்பட்டுள்ளது**

பொருட்டு அந்தந்த பிரதேசத்தில் உள்ள பாடசாலை அதிபர், கிராம சேவகர்கள் கொண்ட ஒரு குழு அமைக்கப்பட்டுள்ளது. அவர்கள் வீடு வீடாக சென்று விழிப்புணர்வூட்டற் செயற்பாடுகளில் ஈடுபடுகின்றனர் எனவும் அவர் தெரிவித்தார்.

# பிரிந்த சிறுவர்களை குடும்பங்களோடு இணைக்கும் முயற்சியில் 'சிறுவர் உதவி இணைப்பு' செயற்றிட்டம்



வவுனியா மாவட்ட அரசாங்க அதிபர் பி.எஸ்.எம்.சார்ள்ஸ் ஆரம்ப வைபவத்தின்போது உரையாற்றுகையில்

வவுனியா மாவட்ட செயலகத்தின் குடும்ப உறவுகளைத் தேடும் பிரிவின் (Family Tracing Unit) ஒரு பகுதியாக 'சிறுவர் உதவி இணைப்பு'(Helpline for Children ) கடந்த வாரம் மாவட்டத்தின் அரசாங்க அதிபர் திருமதி பி.எஸ்.எம்.சார்ள்ஸ் இனால் ஆரம்பித்து வைக்கப்பட்டது.

குடும்பங்களிலிருந்து பிரிந்த சிறுவர்களை மீள இணைத்தல், சிறுவர் துஷ்பிரயோகம் முதலான விடயங்கள் இப்பிரிவினால் கையாளப்படும் எனத் தெரிவிக்கப்படுகிறது.

நன்னடத்தைச் சிறுவர் பராமரிப்புத் திணைக்களத்தோடு இணைந்து வவுனியா மாவட்ட செயலகம் முன்னெடுக்கும் இச் செயற்றிட்டத்துக்கு யுனிசெப் உதவி வழங்குகின்றது.

**உறவுகளைப் பிரிந்த சிறுவர்கள் தொடர்பாக இடம்பெயர்ந்த மக்கள் கீழ்க்காணும் இலக்கத்தைத் தொடர்பு கொள்ளலாம்:**

**024 222 55 66**

தற்போதைக்கு வார நாட்களில் காலை 8.30 இலிருந்து மாலை 5.30 மணிவரை இந்தத் தொடர்பிலக்கம் சேவையிலிருக்கும் எனத் தெரிவிக்கப்படுகிறது.

## இடம்பெயர்ந்த...

(1ஆம் பக்கத் தொடர்ச்சி)

இடம் பெயர்ந்த முஸ்லிம் மக்கள் தெரிவிக்கின்றனர்.

மன்னாரில் மீள்குடியமர்த்தப்பட்டவர்களுக்கு அங்கு போதுமான அளவு உட்கட்டமைப்பு வசதிகள் இல்லாததன் காரணமாக முழுமையான குடும்பமாக செல்ல முடியாமல் இருப்பதாக அப்பிரதேசத்தில் வசிக்கும் முஹம்மத் சுல்தான் அமானுல்லாஹ் கூறினார்.

அவர் தொடர்ந்தும் கூறுகையில்: ஆண்கள் மன்னாரிலும் பெண்கள் புத்தளத்திலுமாக இருக்கின்றனர். ஏனெனில் மன்னாரில் பாடசாலை வசதிகள், ஏனைய உட்கட்டமைப்பு வசதிகள் போதாமையால் பெண்கள் தமது பிள்ளைகளை அழைத்துச் செல்லாமல் இருக்கின்றனர். கணவன்மார் தொழில் நிமிர்த்தமாக அங்குள்ளனர். இதனால் இவர்களின் வாக்குரிமை அங்கும் இங்குமாக உள்ளது.

இது தொடர்பாக மன்னார் அரச அதிபரை தொடர்பு கொண்டபோது, மன்னாரில் மீள்குடியமரும் முஸ்லிம்களின் தேவைகளை விரைவாக நிறைவேற்றுவதில் பல விடயங்கள் கவனத்திற் கொள்ள வேண்டியுள்ளது எனத் தெரிவித்தார்.

பயிர்ச்செய்கை மற்றும் பாடசாலை காலங்களாக இருக்கின்றதன் காரணமாக அவர்களது குடும்பங்களையும் பிள்ளைகளையும் விட்டு விட்டுத்தான் பெரும்பாலானவர்கள் இங்கு தொழிலுக்காக வந்திருக்கின்றனர். அவர்கள் புத்தளம் மாவட்டத்தில் தங்களது பதிவுகளை ரத்துச் செய்து விட்டு இங்கே வந்திருப்பதால், அவர்களுக்குரிய உதவிகளை கொடுத்துக் கொண்டிருக்கிறோம். இருந்தாலும் மக்கள் முழுமையாக மீள்குடியமரக் கூடிய வகையில் பிரதேசத்தின் உட்கட்டமைப்பு வசதிகள் மேம்படுத்தப்பட வேண்டியுள்ளது என்றார்.

அசாதாரண சூழ்நிலைகள் காரணமாக வடக்கிலிருந்து 1990 ஆம் ஆண்டுகளில் பலவந்தமாக 2 மணிநேரத்துக்குள் வெளியேற்றப்பட்ட் வன்னி மற்றும் யாழ். தேர்தல் மாவட்டத்தைச் சேர்ந்த முஸ்லிம் மக்களின் வாக்குகள் கடந்த காலங்களில் புத்தளத்திலேயே பதியப்பட்டன என்பதும் குறிப்பிடத்தக்கது.

## ஜனாதிபதித்...

(1ஆம் பக்கத் தொடர்ச்சி)

''இடம்பெயர்ந்த மக்கள் வாக்களிப்பதற்கான சந்தர்ப்பத்தை ஏற்படுத்திக்கொடுக்கும் நோக்குடன் அவர்களுக்கு விண்ணப்பமொன்று விநியோகம் செய்யப்பட்டது. அந்த விண்ணப்பத்தை நிரப்பிக் கொடுப்பதன் மூலம் அவர்களுக்கு வாக்களிப்பதற்கான சந்தர்ப்பம் வழங்கப்படும்'' என்றார்.

அத்தோடு அம்மக்கள் வாக்களிப்பதற்கான நலன்புரி முகாம்களிலும், அவர்கள் தங்கியிருக்கும் பகுதிகளிலும் வாக்களிப்பதற்கான சந்தர்ப்பம் வழங்கப்படவுள்ளது. அதுமட்டுமல்லாது பாதுகாப்புத் தரப்பினரிடம் சரணடைந்தவர்கள் இம்முறை தேர்தலில் வாக்களிப்பதற்கான சந்தர்ப்பமும் ஏற்படுத்திக் கொடுக்கப்படும். தேர்தலில் வாக்களிப்பதற்கு தமது அடையாளத்தை உறுதிப்படுத்துவதற்கான ஆவணம் மிக முக்கியமானதாக இருக்கிறதோடு, தேசிய அடையாள அட்டை அல்லது வேறு ஆவணங்கள் இல்லாதவர்களுக்கு தற்காலிக அடையாள அட்டை வழங்குவதற்கான நடவடிக்கையும் முன்னெடுக்கப்பட்டுள்ளது என அவர் கூறினார்.

இதேவேளை, மன்னார் மாவட்டத்தில் இடம்பெயர்ந்த மக்களில் பலர் தேர்தலில் வாக்களிப்பதற்கு சந்தர்ப்பம் கோரி விண்ணப்பித்துள்ளதோடு, அந்த விண்ணப்பங்கள் சம்பந்தப்பட்ட அதிகாரிகளுக்கு அனுப்பி வைக்கப்பட்டுள்ளதாக மன்னார் மாவட்ட அரசாங்க அதிபர் நிக்கலஸ் பிள்ளை தெரிவித்தார்.

12/04

# ஆழிப்பேரலை ஏற்படுத்திய ஆறாவடுக்கள்



வைப்பகப்படம்: ஆழிப்பேரலையினால் அழிவுற்ற அம்பாறை மீனவர் கிராமம்

நிரஞ்சனி ரோலண்ட்

அந்த மிகப்பெரிய அழிவை யாருமே நினைத்துக் கூட பார்க்கவில்லை. அந்த பெயரை யாரும் அறிந்தும் இருக்கவில்லை. கடற்கரை வாழ் மக்களின் மனதோடும் வாழ்வோடும் கலந்திருந்த அற்புதமான கடலானது சுனாமி என்ற இராட்சத அலைகளாய் வந்து மக்களின் உயிர்களை காவுகொண்டது, உடமைகளை முற்றாக அழித்தது எல்லாமே ஒரு சில நிமிடங்களுக்குள் நடந்தேறியது.

2004ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் 26ஆம் திகதி இந்த பேரழிவு இடம்பெற்றது. இந்த பேரழிவு இடம்பெற்று ஐந்து வருடங்கள் பூர்த்தியாகின்ற நிலையிலும் அதனால் ஏற்பட்ட ரணங்களும் வேதனைகளும் என்றும் மாறாதவை .

இந்தோனேசியாவின் சுமத்திரா தீவில் ஆரம்பித்த சுனாமி பேரலையின் கோரத் தாண்டவம் இலங்கையிலும் பேரழிவை ஏற்படுத்தியது.இலங்கையின் கரையோரப் பகுதிகளில் வாழும் பெரும்பாலான மக்கள் சுனாமியால் பெரும் அழிவுகளை சந்தித்தனர்.

அம்பாறை, மட்டக்களப்பு,அம்பாந்தோட்டை, காலி, மாத்தறை, திருகோணமலை, யாழ்ப்பாணம், முல்லைத் தீவு ஆகிய மாவட்டங்கள் சுனாமி பேரலையால் பெரிதும் பாதிக்கப்பட்டன.

> “அனர்த்தத்துக்கு முகம் கொடுத்து ஆண்டுகள் ஐந்து கடந்த போதிலும் அதன் நினைவலைகள் தொடர்ந்த வண்ணமே உள்ளன ”

கட்டிடங்கள், மதஸ்தலங்கள், மருத்துவமனைகள்,பொதுச்சந்தைகள்,பாலங்கள் என பல பகுதிகளும் அழிந்தன. இதேவேளை மின்சாரம் ,குடிநீர், தொலைபேசி இணைப்புக்கள் பாதிக்கப்பட்டன.

இந்த அனர்த்தத்துக்கு முகம் கொடுத்து ஆண்டுகள் ஐந்து கடந்த போதிலும் அதன் நினைவலைகள் தொடர்ந்த வண்ணமே உள்ளன என்கிறார் மருதமுனையைச் சேர்ந்த அப்துல் அமீட் சித்திக் குவைதா -

புகை மண்டலம் போல் அலை வந்தது. எங்களது வீட்டைக் காணவில்லை. வீட்டிலிருந்த யாருமே அங்கு இருக்கவில்லை. எனது உயிரைக் காப்பாற்றிக் கொள்ள நினைத்து அருகிலிருந்த சகோதரியின் குழந்தையை மாத்திரம் தூக்கிக் கொண்டு தண்ணீரில் நடந்து சென்றேன். மரக்குச்சியொன்றை கையில் எடுத்துக்கொண்டு .அதனை குத்தி குத்தி குழியுள்ளதா என்பதை பார்த்தவாறு மலை உச்சியை நோக்கி வந்தேன். இந்நிலையில் நான் மயக்கமுற்று விழுந்தேன். நினைவு வந்து பார்க்கும் போது மருத்துவமனையில் இருந்தேன். உயிரை காப்பாற்றிக் கொண்டேன். ஆனால் இன்று பெற்றோரையும் சகோதரர்கள் சிலரையும் இழந்து அனாதையாக தனிமரமாக நிற்கின்றேன்.

பல்வேறு போராட்டத்துக்கு மத்தியில் உயிரை காப்பாற்றிக் கொண்டேன். ஆனால் வாழ்வாதாரங்களை ஏற்படுத்திக் கொள்வதற்கு பல்வேறு சவால்களை எதிர்கொண்டதாக கூறுகின்றார் அப்துல் அமீட் சித்திக் குவைதா

எனக்கு முஸ்லிம் பெண்கள் ஆராய்ச்சி நிலையம் தையல் மெஷின் வழங்கினார்கள். அதன் பின்னர் தையல் தொடர்பான நுணுக்கங்களை கற்றுக்கொள்வதற்காக கொழும்புக்கு அனுப்பினார்கள். பின்னர் புதுடில்லிக்கு அனுப்பினார்கள். அங்கு சென்று தையல் கற்றுக் கொண்டேன். இரண்டு வருடத்துக்கு பின்னர் வீடொன்று கட்டித்தந்தார்கள். கொஞ்சம் காலம் பின்னர் திருமணம் முடித்து தந்தார்கள். தற்போது கணவனுடனும் குழந்தையுடனும் வாழ்ந்து வருகின்றேன்.

சுனாமி ஆழிப்பேரலையால் இழந்தவற்றை படிப்படியாக பெற்றுக் கொள்வதற்கான முயற்சியில் ஈடுபட்டுக் கொண்டிருக்கும் மட்டக்களப்பு கல்லடி திருச்செந்தூரைச் சேர்ந்த சித்திவடிவேல் இராஜேந்திரன் ராஜேஸ்வரியின் மன வெளிப்பாடு இது. யுத்தத்தால் பாதிக்கப்பட்ட எனது வாழ்க்கையில் ஓரளவுக்கு தென்றல் வீசிக்கொண்டிருந்தபோது சுனாமி ஆழிப்பேரலையால் மீண்டும் அனைத்தையும் இழக்க நேரிட்டது. 1990 ஆம் ஆண்டு கணவரை இழந்த விதவை நான் மிகவும் கஷ்டப்பட்டு

6 ஆம் பக்கம்

## வடக்கு, கிழக்கைச் சேர்ந்த பெண்களும், விதவைகளும் பல்வேறு சிரமத்துக்கு மத்தியில் குறிப்பாக பொருளாதார நெருக்கடிகளில் வாழ்ந்து வருகின்றார்கள்



‘சுனாமி புகையிரதம்’ என கூறப்படும் 591 இலக்க புகையிரதத்தின் 15059 , 8317 ஆகிய இரண்டு பெட்டிகள் மட்டும் தற்போது கொழும்பிலுள்ள , மாளிகாவத்தை புகையிரதம் திருத்தும் பிரிவில் காணப்படுகிறது. ஏனைய பெட்டிகள் தற்போது எங்குள்ளது என்பது யாருக்கும் தெரியாதவொரு விடயமாகவுள்ளது. இந்த புகையிரதமானது ‘சுனாமியால் தாக்கப்பட்டபோது அதில் பயணித்த பயணிகளில் சுமார் 1500 பேர்வரை உயிரிழந்தது டன், பலர் காயங்களுக் கும் உள்ளானார்கள்.

படம்:இந்திக/Perambara



வைப்பகப்படம்: தண்டவாளத்தை புரட்டிப்போட்டிருக்கும் சுனாமி - 2004.11.மாத்தறையில்

# மீள்குடியமர்த்தப்படும் மக்களின் அபிவிருத்திக்காக 65 மில்லியன் அமெரிக்க டொலர்கள்

## உலக வங்கியின் சிரேஷ்ட கிராமிய அபிவிருத்தி நிபுணர்

*உலக வங்கியினால் வடக்கில் மீள் குடியமர்த்தப்பட்ட மக்களுக்காக அவசர வடக்கு திட்டம் (Emergency Northern Recovery Project - ENREP)ஆரம்பிக்கப்பட்டுள்ளது. இந்தத் திட்டத்தினூடாக இந்த மக்கள் தமது வாழ்வாதாரத்தைக் கட்டியெழுப்ப தேவையான உதவிகள் வழங்கப்படுகின்றன. இந்தத் திட்டம் தொடர்பாக விளக்கம் அளிக்கின்றார் உலக வங்கியின் சிரேஷ்ட கிராமிய அபிவிருத்தி நிபுணர் சீனித்தம்பி மனோகரன்.*






ஏ.சொர்ணலிங்கம்

**உலக வங்கி வடக்கில் மீள் குடியேற்றப்பட்டவர்களுக்கான ஒரு திட்டத்தை ஆரம்பித்துள்ளது. இந்த திட்டம் தொடர்பாக கூற முடியுமா?**

அவசர வடக்கு திட்டமானது, வடமாகாணத்திலுள்ள, முற்றாக இடம்பெயர்ந்த மக்களுடைய பிரதேசமாகிய கிளிநொச்சி, முல்லைத்தீவு மாவட்டங்களிலும், வவுனியா மன்னார், யாழ்ப்பாணம் மாவட்டத்தின் ஒரு சில பகுதிகளை உள்ளடக்கிய பிரதேசத்தின் ஒரு லட்சம் இடம்பெயர்ந்த மக்களுக்கு உதவி செய்வதற்காக அமைக்கப்பட்ட திட்டம்.

*"கிளிநொச்சி, முல்லைத்தீவு, வவுனியா, மன்னார் ஆகிய மாவட்டங்களில் இந்தத் திட்டம் ஆரம்பிக்கப்பட்டுள்ளது"*

**இந்தத் திட்டம் எவ்வாறு நடைமுறைப்படுத்தப்படும் என கூற முடியுமா?**

இந்தத் திட்டத்தில் மூன்று கூறுகள் உள்ளன. முதலாவதாக, மக்கள் மீளக் குடியமர்த்தப்பட்டவுடன் தங்களது வாழ்வாதாரத்தை உடனடியாக ஆரம்பிப்பதற்கான நடவடிக்கைகள் எடுக்கப்படும். பயிர்ச்செய்கைக்குத் தேவையான விதைநெல், மீன்பிடிக்குத் தேவையான உபகரணங்கள் போன்றவை இனாமாக வழங்கப்படும். இரண்டாவதாக மக்கள் தங்களது வருமானத்தை ஈட்டக்கூடியதான வேலை வாய்ப்புக்களை மக்களுக்கு வழங்குகின்றது. மூன்றாவதாக அவர்களுக்குத் தேவையான நீர்ப்பாசனம், வீதிப் புனரமைப்பு, அரசாங்க அலுவலகங்கள் புனரமைப்பு போன்றவை அமைந்துள்ளன.

**இளைஞர்களுக்கான வேலைவாய்ப்பிற்காக எவ்வாறான பயிற்சிகள், எந்த துறைகளில் வழங்கப்படுகின்றன?**

மேசன், தச்சுவேலை, மின்னிணைப்பு வேலைகள், குடிநீர் அமைப்பு போன்றவற்றிலும், இவற்றைவிட ஆடைத்தொழில் மற்றும் வேறு கைத்தொழில் தொடர்பான பயிற்சிகளை மேற்கொண்டு வருகின்றோம்.

**உங்களுடைய இந்த திட்டம் எந்த பிரதேசங்களிலே ஆரம்பிக்கப்பட்டுள்ளன என்று கூற முடியுமா?**

கிளிநொச்சி, முல்லைத்தீவு, வவுனியா, மன்னார் ஆகிய மாவட்டங்களில் இந்தத் திட்டம் ஆரம்பிக்கப்பட்டுள்ளது. மிகக் கூடிய விரைவில் யாழ்ப்பாண மாவட்டத்திற்கும் இந்தத் திட்டம் விஸ்தரிக்கப்படும்.

**இந்தத் திட்டத்திற்காக உங்களால் ஒதுக்கப்பட்டுள்ள தொகை எவ்வளவு?**

மொத்தமாக அறுபத்தைந்து மில்லியன் அமெரிக்க டொலர்கள் ஒதுக்கப்பட்டுள்ளது.

**இந்தத் திட்டத்தின்மூலம் ஒரு குடும்பத்திற்கு எவ்வளவு தொகை பணம் கிடைக்கும் என்று கூற முடியுமா?**

ஒரு கிராமத்தில் ஒருவருக்கு ரூபாய் ஆறாயிரம் வீதம், அந்த கிராமத்தில் உள்ள சனத்தொகையை கணக்கிட்டு, அதன்படி வருகின்ற பணம் அந்த மக்களுக்காக இனாமாக ஒதுக்கப்படுகின்றது. ஒரு கிராமத்தைப் பொறுத்தவரை, கிட்டத்தட்ட ரூபாய் எண்பது லட்சம் அந்த மக்களுக்குக் கிடைக்கும்.

**உங்களால் கொடுக்கப்படும் இந்தத் தொகையானது எவ்வாறு மக்களை சென்றடையும் என்று கூற முடியுமா?**

இந்தத் திட்டத்தை நடைமுறைப்படுத்துவதற்காக வடக்கிற்கான திட்ட முகாமைத்துவப் பிரிவு வவுனியாவில் அமைந்துள்ளது. அதைவிட ஒவ்வொரு மாவட்டத்திலும் உள்ள அரசாங்க அதிபர் அலுவலகத்தில் இந்தத் திட்டத்திற்கான மாவட்ட அலுவலகங்கள் உள்ளன. அவற்றினூடாக நீதியாக மக்களுக்கு உதவிகள் சென்றடையும். ஏனைய அரசாங்க திணைக்களங்களின் ஊடாக இந்த உதவிகள் செல்வதில்லை.

**இந்தத் திட்டத்திற்காக உங்களால் ஒதுக்கப்பட்டுள்ள தொகை போதுமானதாக இருக்கும் என நீங்கள் நினைக்கின்றீர்களா?**

அந்த ஒரு லட்சம் மக்களை உள்ளடக்கிய பிரதேசத்தின் வேலைத்திட்டங்களை முழுமையாக செய்வதாக இருந்தால், ஒரு பில்லியன் டொலர் தேவைப்படும். நாங்கள் ஒதுக்கியுள்ள பகுதி நூற்றுக்கு ஐந்து வீதமாகவே உள்ளது. ஆகையால் ஏனைய நிறுவனங்களுடைய உதவி மற்றும் உலக வங்கியினுடைய மேலதிக உதவிகள் இந்த இடங்களுக்குத் தேவைப்படும்.

**உங்களுக்குத் தேவைப்படும் மேலதிக உதவிகளைப்பெற்றுக் கொள்வதற்கான நடவடிக்கைகளை நீங்கள் ஆரம்பித்துவிட்டீர்களா?**

தற்பொழுது ஆரம்பிக்கப்பட்டுள்ள இந்த அவசர திட்டத்தினுடைய பலாபலன்களைப் பொறுத்து மேலும் உதவிகளையும், ஏனைய நிறுவனங்களின் உதவிகளையும் சேர்த்து செய்வதற்கு நாங்கள் உத்தேசித்துள்ளோம்.

**உலக வங்கி வவுனியா பாவற்குளத்தை புனருத்தாபனம் செய்வதற்கான திட்டத்தை ஆரம்பித்துள்ளது. இது தொடர்பாக விபரிக்க முடியுமா?**

பாவற்குளம் நீர்ப்பாசனத் திட்டப் பகுதியானது வவுனியா தெற்கு, வேங்கலச்செட்டிக்குளம் ஆகிய இரண்டு பிரதேச செயலாளர் பிரிவுகளை உள்ளடக்கியதாக இருக்கின்றது.மூன்று இனத்தையும் சேர்ந்த கிட்டத்தட்ட இரண்டாயிரத்து இருநூறு குடும்பங்கள் வாழ்கின்ற பகுதியில் இருப்பதால் இந்தத் திட்டம் முன்னுரிமைப் படுத்தப்படுகின்றது. இந்தத் திட்டத்திற்கான வேலைகள் தற்போது ஆரம்பிக்கப்பட்டுள்ளன. இதைவிட இந்தப்பகுதியில் பன்னிரண்டு மையக்கிராமங்கள் வேலைத்திட்டத்திற்காகத் தெரிவு செய்யப்பட்டு அவற்றிற்கான பண உதவிகள் இந்த கிராம மக்களுக்காக இனாமாகஒதுக்கப்பட்டிருக்கின்றன.

*"பயிர்ச்செய்கைக்குத் தேவையான விதைநெல், மீன்பிடிக்குத் தேவையான உபகரணங்கள் போன்றவை இனாமாக வழங்கப்படும்"*

## 'மீண்டும் வாழ்வோம்' வானொலி நிகழ்ச்சி



**'மீண்டும் வாழ்வோம்'' வானொலி நிகழ்ச்சி நவம்பர் மாதம் தொடக்கம் புதிய பல அம்சங்களுடன் இலங்கை ஒலிபரப்புக்கூட்டுத்தாபனத்தின் தேசிய சேவையில் திங்கள் முதல் வெள்ளிவரை இரவு 9.30 முதல் 10.00மணி வரையும் கிழக்கு மாகாணத்தில் பிறை எப்.எம். வானொலியில் ஞாயிற்றுக் கிழமைகளில் பிற்பகல் 1.30 மணி முதல் 2.00 மணிவரையும் ஒலிபரப்பாகவுள்ளது. எமது நிகழ்ச்சி ஒலிப்பதிவுகளையும் இப்பத்திரிகையையும் http://lifeline.internews.lk/ என்ற இணையத்தளத்தில் தரவிறக்கம் செய்யலாம்.**

எமது நிகழ்ச்சிகள் குறித்த உங்களது கருத்துக்களை எழுதியனுப்புங்கள்.

## உங்கள் எண்ணங்களை எமக்குத் தெரிவியுங்கள்

*அன்பார்ந்த வாசகர்களே,*

*''மீண்டும் வாழ்வோம்'' தகவல் இதழானது இடம்பெயர்ந்து இடைத்தங்கல் முகாம்களில் வாழும் உங்களது நலன் கருதி வாரம் தவறாமல் வெளிவந்து கொண்டிருப்பதை அறிவீர்கள்.*

*இடம்பெயர்ந்தோர் தொடர்பிலான அரச மற்றும் அரசசார்பற்ற நிறுவனங்களின் முன்னெடுப்புகள், உங்கள் வாழ்வை மீளக்கட்டியெழுப்பக் கூடிய வாழ்வாதாரத் தகவல்கள் எனப் பலதரப்பட்ட விடயங்களையும் காத்திரமான முறையில் உங்களிடம் சேர்ப்பிக்கும் பணியை ''மீண்டும் வாழ்வோம்'' செய்து வருகிறது.*

*மெனிக்பாமிலுள்ள இடம்பெயர்ந்த மக்கள் யாவரையும் ஜனவரி மாத இறுதிக்குள் மீள்குடியேற்ற விருப்பதாக அரசாங்கம் அறிவித்துள்ள நிலையில், அதன் பிறகான காலங்களிலும் உங்களது வாழ்நிலை மேம்பாட்டுக்கு உதவக்கூடிய தகவல்களைத் தர வேண்டிய அவசியம் தொடர்ந்தும் இருப்பதாகவே நாம் நம்புகிறோம்.*

*இது தொடர்பில் நீங்கள் எமக்கு எழுதி அனுப்பக்கூடிய கருத்துகள் மிகுந்த பயன்பயக்குவதாய் அமையும்.*

*கீழ்க்காணும் விடயங்கள் தொடர்பில் உங்களது அபிப்பிராயங்களை எமக்கு எழுதியனுப்புங்கள்:*

- *''மீண்டும் வாழ்வோம்'' இதழ் மற்றும் வானொலி நிகழ்ச்சி என்பன இதுவரை காலமும் உங்களுக்கு வழங்கி வந்த தகவல்களால் நீங்கள் பயனடைந்துள்ளீர்களா? எவ்வகையான பயன்கள்?*
- *நீங்கள் மீள்குடியமரும் இடங்களில் ''மீண்டும் வாழ்வோம்'' இதழ் கிடைக்க வேண்டும் என்று விரும்புகிறீர்களா?*
- *நீங்கள் எழுத்துத்துறை/இதழியல்துறையில் ஆற்றல்/ஆர்வம் உள்ள பாடசாலை/பல்கலைக் கழக மாணவரா? அவ்வாறாயின் ''மீண்டும் வாழ்வோம்'' இதழுக்கு பங்களிக்க விரும்புகிறீர்களா? (ஆர்வமுள்ளவர்கள் உங்கள் சுயவிபரங்களை எமக்கு அனுப்பி வைக்கலாம். தேவைப்படுமிடத்து நாம் உங்களைத் தொடர்பு கொள்வோம்)*

**ஆசிரியர், மீண்டும் வாழ்வோம்**
**த.பெ. இல:1039, கொழும்பு**

உங்கள் கதைகள்

# அவதானம்

லோஷினி

**'மீண்டும் வாழ்வோம்' வானொலி நிகழ்ச்சியில் உங்கள் கதைகள் தொடர் நாடக வடிவில் இடம்பெற்று வருகின்றன. ஒவ்வொரு நிகழ்ச்சியிலும் ஒலிபரப்பாகும் நாடகங்களின் தொகுப்பை இப்பத்திரிகை வாயிலாகவும் உங்களுக்குத் தருகிறோம். கடந்தவாரம் இடம்பெற்ற 'அவதானம்' நாடகத்தின் சுருக்கம் இதோ:**



ராசம்மா, மஞ்சு, ஐயாதுரை, ராகவன் ஆகியோர் இந்த நாடகத்தில் தோன்றும் பாத்திரங்கள். ராசம்மாவின் மகள் மஞ்சு கண்ணிவெடி விபத்தில் கணவனை இழந்த விதவை. மஞ்சுவிற்கு பாடசாலை செல்லும் வயதில் ஒரு மகன்.

ராசம்மா, மஞ்சு, ஐயாதுரை, ராகவன் ஆகியோர் தற்போது மீள் குடியேற்றப்பட்ட வர்களில் உள்ளடங்குகிறார்கள். நீண்ட நாட் களின் பின் சொந்த இடத்திற்கு மீண்டும் சென்றதில் இவர்களுக்கு மிகுந்த மகிழ்ச்சி. ராசம்மாவும் ஐயாதுரையும் தங்களது உள் மனது ஏக்கங்களை ஒருவருக்கொருவர் பகிர்ந்து கொள்கிறார்கள்.

மீண்டும் சொந்த மண்ணிற்கு வராமல் இடம்பெயர் முகாமிலேயே உயிர் பிரிந்து விடுமோ என்ற பயத்துடன் இருந்த ஐயாது ரைக்கு மீண்டும் சொந்த மண்ணிற்கு வந்தது நிம்மதி அளித்தது. சிறு வயதில் இருந்து அந்த இடத்தில் வாழ்ந்தவர்களுக்கு தற்போ தைய அந்த இடத்தின் சூழ்நிலை சற்று வருத் தத்தை அளித்தது. வயல்களும் தோட்டங்க ளுமாக இருந்த பூமி தற்போது பாலைவனம் போல காட்சி கொடுத்தமை அவர்களது மன திற்கு வேதனை அளித்தது. மஞ்சுவின் கண வனின் உறவுக்காரர் ஐயாதுரை.

கணவனை இழந்த வேதனையுடன் மகனை படிப்பித்து நல்ல நிலைக்கு கொண்டு வர வேண்டும் என்ற எதிர் பார்ப்புடன் இருக்கும் மஞ்சு கட்டாயமாக வேலைக்கு போக வேண்டிய நிலையில் இருக்கிறாள். யுத்தம் இடம்பெற்ற போது இவர்களுடைய பகுதியில் அதிகளவில் மிதி வெடிகள், நிலக்கண்ணி வெடிகள் புதைக்கப்பட்டிருந்ததை நினைத்து ராசத் திற்கு பயம். அத்துடன் நிலக்கண்ணி வெடியால் ஏற்கனவே இவர்கள் ஒரு உயிரை இழந்துள்ளார்கள். இந்த நிலை யில் மஞ்சுவிற்கு கண்ணிவெடி அகற்றும் பணியில் ஈடுபடும் நிறுவனம் ஒன்றில்; ராகவன் மூலம் வேலை கிடைக்கிறது.

தமக்கு ஏற்பட்ட இழப்பிலிருந்து மற் றவர்களை பாதுகாக்கும் பணியில் இருப் பது மஞ்சுவிற்கு மகிழ்ச்சி. புதிதாக மீள் குடியேற்றம் செய்யப்பட்ட இடங்கள் பாதுகாப்பானவை என்று உறுதிப்படுத்தப் பட்டாலும் மக்கள் கண்ணி வெடி தொடர் பாக அவதானமாக இருக்க வேண்டும். பாழடைந்த நிலையில் உள்ள கோயில்கள், கட்டிடங்கள் உள்ள பகுதிகளிற்கு செல் வதை தவிர்த்துக் கொள்ள வேண்டும். பெற்றோர் பிள்ளைகளை பாடசாலைக்கு அழைத்து செல்வது சிறந்தது. விறகு எடுப் பதற்காக சிறு பற்றைக்காடுகள் இருக்கும் பகுதிகளிற்கு செல்வதை தவிர்த்துக் கொள்ள வேண்டும். இவ்வாறான அறிவு றுத்தல்களை மக்களுக்கு வழங்குவதோடு, பாதிக்கப்பட்டவர்கள் மூலம் பாதிப்பின் தாக்கத்தைப் பற்றி தெளிவு படுத்துவது இவ்வாறான பணிகளில்தான் மஞ்சு பணி புரியும் நிறுவனம் ஈடுபட்டு வருகிறது. மஞ்சு பூரண மனத்திருப்தியுடன் அங்கு வேலை செய்கிறாள்.

இவ்வாறாக, கண்ணி வெடியால் பாதிக் கப்பட்ட ஒரு குடும்பத்தின் தாக்கம் பற்றி இந்த குறு நாடகம் கூறுகிறது.

# ஆழிப்பேரலை...

(4ஆம் பக்கத் தொடர்ச்சி)

இரத்தம் சிந்தி எமக்கென ஒரு வீட்டை கட்டினேன். ஆனால் சுனாமியின் கோரத் தாண்டவத்தால் அதனை இழக்க நேரிட்ட து என்றார்.

சுனாமியால் பாதிக்கப்பட்ட வாழ்க் கையை மீளக்கட்டியெழுப்புவதற்கு எதிர்கொண்ட சவால்களையும் தற்போது வாழ்க்கையில் வெற்றி பெற்றுள்ளதைப் பற்றியும் கூறுகின்றார் மாத்தறையைச் சேர்ந்த கீதா தமயந்தி பண்டார .

சுனாமியால் நாம் பெரிதும் பாதிக்கப் பட்டோம். நாம் செய்துக் கொண்டிருந்த தொழில் முற்றாக பாதிக்கப்பட்டது. இத னால் உளரீதியாக பெரிதும் பாதிக்கப்பட் டேன். எம்மை இயல்பு நிலைக்கு கொண் டுவருவதற்கு தெற்காசிய ஒத்துழைப்பு அமைப்பு எமக்கு கை கொடுத்தார்கள். சுனாமியால் நாம் இழந்தவற்றை பெற்றுத் தருவதாக அவர்கள் கூறினார்கள்.யசோதா பெண்கள் அமைப்பை எமது கிராமத்தில் அமைத்தோம். எமக்கு பல பயிற்சிகளை வழங்கினார்கள்.குழுக்களாக எம்மை பிரித்து தலைமைத்துவ பயிற்சிகள், வர்த் தகத்தை சிறப்பாக முன்னெடுப்பதற்கான அறிவுரைகள், நல்லாட்சி போன்றவற்றை எமக்கு வழங்கினார்கள்.

அதன் பின்னர் வர்த்தகத்தை மேற்கொள் வதற்கு எமக்கு உதவியளித்தார்கள். கடனு தவி அளித்தார்கள். ஒரு இலட்சம் ருபா கடனுதவி கொடுத்தார்கள். எமது கணவன் சீமெந்து மற்றும் செங்கல் வியாபாரத்தை ஆரம்பித்தார். நானும் வாசனைத்திரவியங் களை விற்பனை செய்ய ஆரம்பித்தேன். இன்று சுனாமி ஆழிப்பேரலை ஏற்பட்டு ஐந்து வருடங்கள் கடந்த நிலையிலும் நான் இழந்தவற்றை மீளப் பெற்றுக் கொண் டேன். சந்தோஷமாக இருக்கின்றேன்.

உயிரை காப்பாற்றிக் கொண்டால் மாத் திரம் போதும் என நினைத்த பிரியங்கா விக்கிரமசூரிய தற்போது மாத்தறையில் முன்னணி வர்த்தக பெண்மணியாக விளங் குகின்றார்.சுனாமி பேரழிவினால் பாதிக்கப் பட்ட பலர் தமது இருப்பிடங்களை இழந்து தற்காலிக முகாம்களில் தங்க வேண்டி யேற்பட்டது .இந்த மக்களுக்கு நிவாரண உதவிகளை வழங்குவதற்காக உள்ளூர் மற்றும் வெளியூர் அரச சார்பற்ற நிறுவ னங்கள் முண்டியடித்தன.பல உலக நாடுக ளும் பெருமளவு நன்கொடைகளை வழங் கியன. இதேவேளை மக்களை இயல்பு நிலைக்கு கொண்டு வருவதற்கு அரசும் பாரிய சவால்களை எதிர் கொண்டது.

எனினும் சுனாமி அனர்த்தம் ஏற்பட்டு 5 வருடங்கள் கடந்த நிலையிலும் பலர் இன்னும் அகதி வாழ்க்கையே வாழ்ந்து வருகின்றனர். குறிப்பாக அம்பாறை மாவட்டத்தின் சாய்ந்தமருது பிரதேச செய லகத்துக்குட்பட்ட பகுதியில் வாழ்ந்து வரும் சுனாமியால் பாதிக்கப்பட்ட மக்கள் தற்காலிக முகாம்களிலேயே வாழ்ந்து வரு வதாக தெரிவிக்கப்படுகின்றது.

இங்குள்ள 17 இடைத்தங்கல் முகாம் களில் வாழ்ந்து வரும் மக்களுக்கு இது வரை வீடுகள் அமைத்துக் கொடுக்கப் படவில்லை.இந்த பிரதேசத்தை சேர்ந்த 815 குடும்பங்கள் வீடுகளை இழந்தன. இவற்றில் 122 குடும்பங்களுக்கு மாத் திரமே ஸ்மையில்புரத்தில் வீடுகள் கட் டிக் கொடுக்கப்பட்டுள்ளன. பலருக்கு இதுவரை வீடுகள் அமைத்துக் கொடுக் கப்படவில்லை.அதேவேளை வாழ்வாதா ரங்களை மேற்கொள்வதற்கும் அவர்கள் கஷ்டப்படுவதாக தெரிவிக்கப்படுகின்றது.

சுனாமியால் பாதிக்கப்பட்ட வீட்டை இன்னும் முழுமையாக கட்டி முடிக்க வில்லை என ஆதங்கமாக தெரிவிக்கின் றார் மட்டக்களப்பு கோட்டை கல்லாறைச் சேர்ந்த பரசுராமன் கணபதிபிள்ளை.

சுனாமி அனர்த்தத்தினால் எந்தவொரு உயிரிழப்பும் ஏற்படாதபோதிலும் எனது வாழ்வாதாரத்தையும் இருப்பிடத்தையும் இழந்தேன். சைக்கிள் திருத்துவது மற்றும் கதிரைகளை திருத்துவது போன்றவற்றை சுயதொழிலாக மேற்கொண்டு வந்தேன். எனினும் சுனாமியால் எனது வீடு முற்றாக பாதிக்கப்பட்டது.எனினும் பகுதியளவில் சேதம் ஏற்பட்டதாக அதிகாரிகள் கூறிய தையடுத்து மொத்த சேதத்துக்குமான நட்ட ஈட்டை பெற்றுக்கொள்ள முடியவில்லை. ஒரு இலட்சம் ரூபாவே வழங்கப்பட்டது. ஆறு பிள்ளைகளுடன் வாழ்ந்து வரும் நான் பகுதியளவு நிர்மாணிக்கப்பட்ட வீட் டிலேயே வாழ்ந்து வருகின்றேன்.இன்னும் நிர்மாணப்பணிகள் பூர்த்தியாக்கப்படா மல் இருக்கும் எனது வீட்டை நிர்மாணித் துக்கொள்ள யாராவது உதவி செய்ய முன் வர வேண்டும் என கோரிக்கை விடுத்தார்.



## உங்களிடமிருந்து...

### நட்பு

**உறவுக்கு பிரிவுண்டு**
**உடலுக்கு பிரிவுண்டு**
**உயிருக்கு பிரிவுண்டு**
**ஆனால், அன்மையான நட்பிற்கு**
**என்றும் பிரிவில்லை.**



**அன்பு என்னும் மூன்று**
**எழுத்தை விட பிரிவு**
**என்னும் மூன்று எழுத்து**
**கொடுமையானது.**

**ச.காயத்திரி** தரம் : 11
வீ.இல. 94. வலயம் 25
இராமநாதன் ந.பு.நி.

### இரத்த தானம்

தானஞ் செய்ய வேண்டும்-இரத்த
தானஞ் செய்ய வேண்டும்
மானுடனுக்கு லத்தார் - இதையோர்
மறையாய்க் கொள்ள வேண்டும் (தானம்)

ஊன மொன்றி னாலே - உதிரம்
ஒழுகிப் போகு மானால்
ஈன மாயோர் சீவன் - தனை நாம்
இழக்க நேரு மன்றோ? (தானம்)

சிரம தான மாக - இரத்தங்
செலுத்து வோரி ருந்தால்
மரண வாயில் நின்றும் - பலரை
வழிம நித்த லாகும் (தானம்)

**நித்தியானந்தன் - நிசாந்தினி**
பிரிவு 22
அருணாச்சலம் ந.பு.நி.

### மீண்டும் வாழ்வோம்

'மீண்டும் வாழ்வோம்' பத்திரிகையே உண் கருத்துக்கள் எமக்கு அறிவூட்டுவதாக அமை கின்றது. நீ நாம் மீளக் குடியேறும் இடங்களில் கிடைக்க வேண்டும். எமக்கு அறிவூட்ட நாம் உனக்கு பங்களிக்க விரும்புகிறோம், நீ மென் மேலும் வளர்வதற்காய்.

**அருளானந்தம் பிரசாந்தன்**
தரம் : 12 (கலை)
வலயம் 32
வீ.இ.183
இராமநாதன் ந,பு,நி.

# பூந்தளிர்

எஸ்.பெல்லா டலிமா

**குறள் 8**

**அறவாழி அந்தணன் தாள்சேர்ந்தார்க் கல்லால்**
**பிறவாழி நீந்தல் அரிது**

**விளக்கம்:**
அறக் கடலான அந்தணனின் திருவடிகளைச் சேர்ந்தவர்க்கு அல்லாமல், பிறர்க்கு இன்பமும் பொருளும் ஆகிய கடல்களைக் கடத்தல் இயலாது.

## கழுதைக்குக் கிடைத்த உதை

இரண்டு கழுதைகள் காட்டின் வழியே ஒன்றாகச் சென்றன. ஒரு கழுதை தானியங்களை சுமந்து சென்றது. மற்ற கழுதை தங்க நாணயங்களை சுமந்து சென்றது. தங்க நாணயங்களை என்மேல் ஏற்றி வைத்துள்ளார் நம் முதலாளி, அதனால் எனக்குத்தான் பெருமை என்று கூறிக்கொண்டு நாணயங்கள் வெளியில் தெரியும்படி கர்வமாகச் சென்றது. மற்ற கழுதை அதைக் கண்டுங்காணாமல் சென்றது.

திடீரென அங்கே இரண்டு திருடர்கள் வந்தார்கள். அந்த நேரம் பார்த்து கழுதைகளைத் தனியாக விட்டுவிட்டு காட்டிற்குள் நீர் அருந்தச் சென்றிருந்தார் முதலாளி. அங்கே வந்த திருடர்கள் கழுதைகளையும் அதன் மூட்டைகளையும் கவனித்தார்கள். நமக்கு இன்று நல்ல அதிர்ஷ்டம் என்று சொல்லியபடி இரண்டு கழுதைகளின் அருகில் சென்று மூட்டைகளைக் கவனித்தார்கள்.

ஒரு கழுதையின் முதுகில் தானிய மூட்டையும் மற்ற கழுதையிடம் தங்க மூட்டையும் இருப்பதைக் கண்டார்கள். தங்க மூட்டைகளை அபகரிக்க முயலும்போது கழுதை சற்று பிடிவாதம் பிடிக்கவே அதற்கு நான்கு உதை கொடுத்துவிட்டு மூட்டையை எடுத்துச் சென்றனர். திரும்பி வந்த முதலாளி திருடர்கள் மேல் இருந்த கோபத்திலும் தங்க நாணயங்களை இழந்த வருத்தத்திலும் தங்கத்தை சுமந்து வந்த கழுதைக்கு மேலும் நான்கு அடியும் உதையும் கொடுத்தார். அந்தக் கழுதை வலியால் முணங்கியது. இதைப் பார்த்த மற்ற கழுதை, ‘தங்க நாணயங்களை ஏற்றிச் செல்கிறேன் என்று கர்வங்கொண்டாய், இப்போது உன் நிலை என்ன ஆனது பார்த்தாயா’‘ என்று சிரித்தவாறு கேட்டது.

கழுதைக்கு மட்டுமல்ல கர்வங்கொண்ட மனிதருக்கும் கடைசியில் கேடுதான் விளையும்.

## சிங்களம் Let's COMMUNICATE கற்போம்

සිංහල
Sinhala

Lesson 4

**பாடம் 4**


ගස **கச**
மரம் Tree


මල **மல**
பூ Flower


කුරුල්ලා
**குருல்லா**
Sparrow
குருவி


අහස **அஹச**
வானம் Sky

## வான்வெளியில் ஒரு வட்டம்

சூரியனைவிட 300 மடங்கு பெரிய நட்சத்திரம் பீட்டர்ஸ்கிஸ்.

நட்சத்திரம் என்பது தானாக ஒளிவீசக்கூடியது.

கிரகம் என்பது பூமி, செவ்வாய் போன்றவை. இவைகள் சூரியனைச் சுற்றி வருகின்றன.

துணைக் கோள்கள் என்பன கிரகத்தினை சுற்றி வருவது.

நமது சூரியக் குடும்பத்திலேயே செவ்வாய் கிரகத்தில் உள்ள ஒலிம்பஸ் மான்ஸ் எரிமலை மிகப்பெரியது.

நிலவு சாதாரணமாக இருப்பதை விட ஒன்பது மடங்கு பௌர்ணமியன்று அதிகமாகப் பிரகாசிக்கும்.

சனி கிரகத்தைச் சுற்றி வளையங்கள் இருப்பது போல யுரேனஸ் கோளைச் சுற்றி ஒன்பது வளையங்கள் உள்ளன.

சந்திரனுக்குச் சென்ற ஆய்வாளர்கள் அதிலிருந்து பூமிக்கு எடுத்து வரப்பட்ட பாறைகள் 472 கோடி ஆண்டுகளுக்கு பழமையானது என்று கண்டறிந்துள்ளனர்.

தொடர்ந்து 250 நாட்களுக்குப் பகலாகவே இருக்கும் கிரகம் செவ்வாய்.

## சிறார்களின் கைவண்ணத்தில்....


**ச.துவஸ்டா,**
தரம் 4A, வலயம்4, செட்டிகுளம்.


**பு.சப்திகா,**
தரம் 8.


**பு.பிரமிளா,**
தரம் 7


**அ.தர்சன்,**
தரம் 10,வலயம்20,அருணாச்சலம் ந.பு.நி.


**சா.துசாணி,**
வீ.இ.4401, அருணாச்சலம் ந.பு.நி.


**சி.திருக்குமரன்** (கண்ணன்),
தரம் 09,வலயம்29,அருணாச்சலம் ந.பு.நி.


**சீ.வினோதினி,**
வலயம். 26, அருணாச்சலம் ந.பு.நி.

**அன்பான தம்பி, தங்கைகளே...**

உங்களில் பலபேர் ஏராளமான ஓவியங்களையும் வேறுபல ஆக்கங்களையும் எமக்கு அனுப்பி வைத்திருக்கிறீர்கள். இடவசதி கருதி அவற்றில் சில மாத்திரமே இவ்வாரம் பிரசுரம் பெறுகின்றன... ஏனையவற்றை அடுத்து வரும் வாரங்களில் வெளியிடுவோம்...

# கண்ணிவெடி கவனம்
## Mind the mines

INTERNEWS
EUROPEAN COMMISSION Humanitarian Aid
unicef

**கண்ணிவெடிகள் குறித்து விழிப்புடன் இருங்கள்**

*இலங்கை அரசாங்கம், யுனிசெப் (UNICEF), ஐரோப்பிய ஒன்றியத்தின் மனிதாபிமான உதவிப் பிரிவு (ECHO), ஸ்பெயின் அரசாங்கம் என்பன இன்டர்நியூஸ் நிறுவனத்துடன் இணைந்து நடத்தை ரீதியிலான மாற்றங்களை உண்டுபண்ணுவதன் மூலம் கண்ணிவெடிகள் மற்றும் வெடிக்காத வெடிபொருட்கள் என்பன தொடர்பான உங்களது விழிப்புணர்வை அதிகரிக்கும் பொருட்டும் அத்தகைய பொருட்களிலிருந்து உண்டாகக்கூடிய அனர்த்தங்கள், காயங்கள் என்பனவற்றை குறைக்கும் பொருட்டும் 'கண்ணிவெடி கவனம்' (Mind the mines) என்ற தலைப்பில் கண்ணிவெடி அபாய கல்வியூட்டல் பிரச்சாரத்தை மேற்கொள்கிறது.*

*இலங்கையின் யுத்தம் நடைபெற்ற பகுதிகளில் சுமார் 1.5 மில்லியன் மிதிவெடிகளும் வெடிக்காத பொருட்களும் சுமார் 40 சதுர கிலோ மீற்றர் பரப்பளவில் பரவிக் காணப்படுவதாக தெரிவிக்கப்பட்டுள்ளது.*

*'விழிப்போடு இருப்போம் , வருமுன் காப்போம்'*

*இந்தப் பரப்புரைத் திட்டம் உங்களிடம் இருந்தும் கருத்துக்களை எதிர்பார்க்கின்றது. கண்ணிவெடிகள் தொடர்பான விழிப்புணர்வுத் திட்டம் எவ்வாறு உங்கள் வாழ்வில் மாற்றங்களை ஏற்படுத்தியது என்பது குறித்து எங்களுக்கு எழுதி அனுப்புங்கள்.*



**ஆசிரியர்**
**மீண்டும் வாழ்வோம்**
**த.பெ. இல:1039, கொழும்பு**

**சந்தேகத்திற்கிடமான பொருட்களைக் கண்டால் பின்வரும் நிறுவனம் ஒன்றிற்கு அறிவிப்போம்.**

| வவுனியா மாவட்டம் | மன்னார் மாவட்டம் |
|---|---|
| CTF: 024 222 1127 | CTF: 023 222 2501 |
| DMAO: 024 222 4214 | DMAO: 023 222 2235 |
| SLA: 011 306 1231 | SLA: 011 306 1231 |
| MAG: 024 3243451 | MAG: 023 224 3451 |
| Sarvatra: 024 492 0206 | Sarvatra: 024 492 0206 |
| Horizon: 024 224 8150 | Horizon: 023 223 3055 |
| FSD: 024 458 9059 / 024 222 0052 / 024 324 5737 | |
| DDG: 024 324 8214 | யாழ்ப்பாணம் மாவட்டம் The HALO Trust: 021 320 5339 |
| UNICEF: 024 222 3485 | |

தங்கள் பகுதியிலுள்ள
கிராம சேவை அலுவலர், பாதுகாப்புப் படையினர்
ஆகியோருக்கும் தெரியப்படுத்துங்கள்

## மிதிவெடி ஒன்றை கண்டால் என்ன செய்வது?

- அமைதியாகவும் நகராமலும் நீங்கள் நின்ற இடத்திலேயே அப்படியே நில்லுங்கள்.
- அருகில் இருப்போர்களை விலகிச் செல்லுமாறு எச்சரியுங்கள்
- உதவி கேட்டு அழையுங்கள்
- உகந்த உதவி கிடைக்கும்வரை அமைதியாகக் காத்திருங்கள்
- எவ்வித அபாயகரமான செயல்களையும் செய்யாதீர்கள்



## வெடிக்காத வெடிபொருளை கண்டால் என்ன செய்வது?

- வெடிக்காத வெடிபொருளைக் கண்டால் அவ்விடத்திலிருந்து விலகி அதனை மற்றவர்கள் தொட வேண்டாம் என எச்சரிக்க வேண்டும்.
- அந்தப் பொருளைப் பற்றியும் அது உள்ள இடத்தைப் பற்றியும் குறிப்பெடுத்துக்கொள் ளல் வேண்டும்.
- அவ்விடத்திலிருந்து விலகி பாதுகாப்பானதென குறிப்பிடப்பட்ட பாதை ஓரமாய் சென்று நின்றுகொள்ளுங்கள்.
- உள்ளூரில் உள்ள நிறுவனங்களுக்கு இதுபற்றி அறியத்தரவும்.
- ஊரில் உள்ள ஏனையோருக்கும் அந்தப் பகுதியில் வெடிக்காத வெடிபொருள் இருப்பதைத் தெரியப்படுத்தவும்.
- வெடிக்காத வெடிபொருளை அகற்றும் அதிகாரிகளுடன் அது அகற்றப்படும்வரை தொடர்பில் இருங்கள்.

*வடக்கில் கண்ணிவெடி அகற்றுவதற்கான ஆலோசனைக்குழுவினால் (MAG) முன்னெடுக்கப்பட்டு வரும் கண்ணிவெடி அகற்றும் நடவடிக்கைகள் குறித்து அந்நிறுவனத்தின் இலங்கைக்கான நிகழ்ச்சி முகாமையாளர் லெவ்லின் ஜோன்ஸ் அவர்களை நேர்கண்டுள்ளோம்.*

**MAG நிறுவனம் வடக்கில் எவ்வாறான நடவடிக்கைகளில் ஈடுபட்டு வருகின்றது?**

நாங்கள் வடக்கில் கண்ணிவெடி ஆராய்ச்சிகள் மற்றும் அவற்றை அகற்றும் நடவடிக்கைளில் ஈடுபட்டு வருகின்றோம். தற்போது மன்னார் தானியக்களஞ்சியப் பிரதேசத்தில் எமது நடவடிக்கைகளை துரிதப்படுத்தியுள்ளோம். வடக்கைப் பொறுத்தவரையில் நாங்கள் இந்த வருடம் ஏப்ரல் மாதத்திலிருந்து கண்ணிவெடி அகற்றும் பணிகளில் ஈடுபட்டு வருகின்றோம். இதைவிட நாம் வவுனியாவிலும் கண்ணிவெடி அகற்றும் பணிகளில் ஈடுபட்டு வருகின்றோம். இந்த இரண்டு மாவட்டங்களிலேயே நாம் எமது கவனத்தைச் செலுத்தியுள்ளோம்.

**கண்ணிவெடி அகற்றும் பணிகளைத் துரிதப்படுத்துவதற்காக நீங்கள் எடுத்துள்ள நடவடிக்கைகள் பற்றிக் கூற முடியுமா?**

எமது செயற்திறனை இந்த வருடம் ஜூலை மாதத்திலிருந்து குறிப்பிடத்தக்களவு அதிகரித்துள்ளோம். எங்களுக்கு மேலதிக கண்ணிவெடி அகற்றும் இயந்திரங்கள் கிடைத்துள்ளன. இதைவிட நாம் மேலதிகக் கண்ணிவெடி அகற்றும் நிபுணர்களை இணைத்துள்ளோம். கண்ணிவெடிகளால் மக்களுக்கு அதிகம் பாதிப்புக்கள் ஏற்படாத இடங்கள் என்று இனம்காணப்பட்ட இடங்களிலும் நாம் எமது நடவடிக்கைகளைத் துரிதப்படுத்தியுள்ளோம்.

**கண்ணிவெடி அகற்றும் நடவடிக்கைகளின் போது நீங்கள் எவ்வாறான சவால்களுக்கு முகம் கொடுக்கின்றீர்கள் என்று கூற முடியுமா?**

மக்களை மீண்டும் அவர்களது சொந்த இடங்களில் பாதுகாப்பாக குடியமர்த்துவதற்கு ஏற்ற விதமாக எமது வேலைகளை முடிப்பதுதான் முக்கியமான சவாலாக அமைகின்றது. அதேவளை, நாங்கள் தற்செயலாக சில கண்ணிவெடிகளை அகற்றாமல் விட்டால் அது மக்களுக்கு பாதிப்புக்களை ஏற்படுத்தும். ஆகவே, இவை இரண்டையும் கவனத்தில் கொண்டு எமது நடவடிக்கைகளை மேற்கொண்டு வருகின்றோம்.

**மக்களை மீள்குடியமர்த்திய பகுதிகளில் நீங்கள் நடவடிக்கைகள் மேற்கொள்கின்றீர்களா?**

தற்பொழுது எமது கவனம் மக்கள் மீள்குடியேற்றப் பட்டுக்கொண்டிருக்கும் இடங்களில் இருக்கின்றது. மக்களின் மீள்குடியேற்றம் முற்றாக நிறைவடைந்ததும், அந்தப் பிரதேசங்களில் வேலைகளைத் தொடரக்கூடியதாக இருக்கும். முக்கியமாக நாங்கள் மீளவும் அங்கு குடியேற்றப்பட்ட மக்கள் தங்களை எவ்வாறு பாதுகாத்துக் கொள்வது தொடர்பான அறிவுறுத்தல்களை வழங்கக்கூடியதாக இருக்கும்.

**இலங்கையைப் பொறுத்தவரையில் எவ்வாறான கண்ணிவெடிகள் உபயோகிக்கப்பட்டுள்ளன என்று கூற முடியுமா?**

பல்வேறு விதமான கண்ணிவெடிகள் உபயோகிக்கப்பட்டுள்ளன. சில வெளிநாடுகளிலிருந்து இறக்குமதி செய்யப்பட்டன. மேலும் சில வடக்கிலேயே உற்பத்தி செய்யப்பட்டன. இவை தவிர மோட்டார்கள் மற்றும் வேறு வெடிபொருட்களைக்கொண்டு கண்ணிவெடிகளாக உபயோகித்த சந்தர்ப்பங்களும் உண்டு.



**மிதிவெடிகளால் பாதிக்கப்பட்ட சிறுவர்களுக்கு அனுசரணையாய் இருந்து ஆதரவளியுங்கள்**

இப்பத்திரிகை எக்ஸ்பிரஸ் நியூஸ்பேப்பர்ஸ் (சிலோன்) லிமிட்டெட்டாரால் கொழும்பு - 14, கிராண்ட்பாஸ் வீதி, 185ஆம் இலக்கத்தில் 2009ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் 27 ஆம் திகதி ஞாயிற்றுக்கிழமை அச்சிட்டு வெளியிடப்பட்டது.